VI.—SUPPLY OF BUDGET PAPERS.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** கனம் சபாநாயகர் அவர்களே, ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர் : பட்ஜெட் பேபர்களைப்பற்றி வழக்கமாக டெடெயில்ட் எஸ்டிமேட் ஆப் பட்ஜெட் என்ற பெரிய புஸ்தகம் கொடுக்கப்படுவது வழக்கம். அதற்கு சில அனுபந்தங் களும் கொடுக்கப்படுவது வழக்கம். இது வரையில் அப்படித்தான் கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் இந்த வருடம் அதிகப்படியாக புஸ்தகங்கள் கொடுக்கப்பட்டாலும் அந்த இரண்டு அனுபந்தங் களும் கொடுக்கப்படவில்லை. அவற்றில் ஒன்று கெஜட்டட் ஆபிசர்களுடையவும், நான்-கெஜட்டட் ஆபிசர்களுடையவும் சம்பள விகிதங்கள் அவர்களுடைய நிரந்தர உத்தியோகங்கள் இவைகளைப்பற்றியெல்லாம் இருக்கும். இந்த அரசாங்கத்தில் வேலை பார்க்கக்கூடியவர்களுடைய ஜாப்தா அதில் இருக்கும். அந்தந்த இலாகாவில் வேலை பார்க்கக்கூடியவர்களுடைய நிரந்தர ஜாப்தாவும் இருக்கும். அவரவர்களுக்கு என்னென்ன சம்பளம் என்றெல்லாம் இருக்கும். அவரவர்களுடைய பஞ்சப்படி எல்லாம் இருக்கும். அந்த ஜாப்தா வழக்கமாகக் கொடுக்கப் படுவது, இப்பொழுது கொடுக்கப்படவில்லை. அதன் காரணம் என்னவென்பது தெரியவில்லை. இன்னும் இந்த விவாதம் இரண்டு நாட்கள் நடக்கப் போகிறது. அதற்குள் அவற்றை அச்சடித்துக் கனம் அங்கத்தினர்களுக்குக் கொடுக்க முடியுமா? அப்படி தனியாக அச்சடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்ய முடியுமா என்பதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் இந்த ஒழுங்குப் பிரச்னையைக் கொடுத்திருக்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் சபாநாயகர் அவர்களே, இதைப்பற்றி நாளை விளக்கம் கூறுகிறேன். ஆனால் சில அங்கத் தினர்கள் அதிகப்படியான பேப்பர் அச்சடித்துக் கொடுத்திருக் கிறார்கள் என்று புகார் சொல்லுகிறார்கள். ஆனால் கனம் கலியாண சுந்தரம் அவர்கள் சிலவற்றைக் கொடுக்கவில்லை என்று சொல்லு கிறார். ஏன் கொடுக்கப்படவில்லை என்பதைப்பற்றி நாளை விளக்கம் கூறுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** புஸ்தகம் கொடுக்கவில்லை என்றால் புகார் சொல்வதாக அர்த்தமில்லை.

VII.—REVISED BUDGET FOR 1962-63—GENERAL DISCUSSION—*cont.*

* **திரு. ஏ. ராமச்சந்திர ராயர் :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது 1962-63-க்கான நிதி நிலை ஆண்டு அறிக்கையைப்பற்றி பேசும்போது அதை நான் வரவேற்று என்னுடைய சில கருத்துக் களைச் சொல்ல முன்வந்துள்ளேன். நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் சற்று நிதானத்துடனும், நல்ல முறையிலும் இந்த நிதி நிலை அறிக்கையை தயாரித்து சமர்ப்பித்திருக்கிறார். அதை நான் ஆதரிக்கிறேன். எதிர்க்கட்சி அங்கத்தினர் திரு. கருணாநிதி அவர்கள் பேசும்போது பல புள்ளி விவரங்களைக் கொடுத்து அள்ளித் தெளித்து விட்டார்கள் என்று குறிப்பிட்டார். அதைப்போலவே கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம்